# திருக்கோவையார் இயல்பு

தை. ஆ. கனகசபாபதி முதலியார்
இயற்றியது

'நவசக்தி' ஆசிரியர்
திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள்
அணிந்துரையுடையது

பழனியாண்டிப் பிள்ளை கம்பெனி
ஜார்ஜ் டவுன், சென்னை

 [விலை அணா 5

1936

# பொருளடக்கம்

# ஆக்கியோன் முகவுரை

நந்தமிழ் மொழியிலுள்ள நூற்கள் பல. அவற்றுள் முன்னைநாள் தோன்றிய சங்க நூற்களே சாலச் சிறந்தன. அந்நூற்களைப் பயிலுவோர்க்கே இயற்கை இன்பம் இனிது புலனாகும். இடைக்காலத்தில் தோன்றிய நூற்களுள் மிகச் சிலவே போற்றற்குரியன.

மணிவாசகர் பாடிய திருக்கோவையார் சங்க நூற்களுளொன்றன்று. எனினும், அவற்றோடு ஒன்றாக வைத்து எண்ணும் பெருமை இதற்கே உண்டு. இந்நூலின் உயர்வை உணர்தற்குச் சங்க நூற் பயிற்சி பெரிதும் வேண்டும். செய்யுள் நூற்களில் பெரும்பயிற்சியுடையார்க்கே திருக்கோவைச் செய்யுட்களின் இனிய எளிய தண்ணிய நடையின் செம்மை நனி விளங்கும்.

இந்நூலை யான் படித்தபோது எனக்குப் பற்பல கருத்துக்கள் தோன்றின. அவற்றையெல்லாம் வரையின் நூல் பெருகும். ஆதலின், திருக்கோவையாரின் உள்ளக்கிடக்கையை அறிய

விரும்புவார்க்குத் துணை செய்யும் செய்யுள் சில வற்றைப் பற்றியே ஈண்டு வரைந்துள்ளேன்.

இச்சிறு நூற்கு அணிந்துரை எழுதியுதவிய 'நவசக்தி' ஆசிரியர் - திரு. வி. கலியாணசுந்தர முதலியார்க்கு என் வணக்கம் உரியதாகுக.

சென்னை,
15—10—'36.

தை. ஆ. க.

# அணிந்துரை

பொருள் இரு வகை. அவை அகம் புறம் என்பன. அகம் எது? புறம் எது? அகம் நுண்மை. புறம் பருமை. அகம், புறத்தின் ஒடுக்கம். புறம், அகத்தின் முகிழ்ப்பு. இரண்டும் தொடர்புடையன.

வாழ்விலும் அகம் உண்டு; புறம் உண்டு. அகம் இன்பத்தாலாவது. புறம் பொருளாலாவது. பொருள் இன்பத்துக்கு இன்றியமையாதது. அக இன்பத்தைப் பற்றியும் புறப் பொருளைப் பற்றியும் அறிஞரால் யாக்கப்பட்ட நூல்கள் பல.

அக நூல்கள் பல திறத்தன. அவைகளுள் கோவை ஒரு திறம். கோவைகளுள் தலையாயது மாணிக்கவாசகரருளிய திருக்கோவை. திருக்கோவை, திருச்சிற்றம்பலக்கோவையென்றும், திருக்கோவையாரென்றும் வழங்கப்படுகிறது. நூற்பெயர்க்கு உயர்திணை விகுதி புணைவது ஒரு வித மரபு. நாலடியார், திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானசித்தியார் முதலிய வழக்குகளை நோக்குக. சீக்கியர் தமது மறைநூலை, 'கிரந்த சாஹிப்' என்றே சொல்வர்.

திருக்கோவையார் சிற்றின்ப நூலென்றும், அது, பேரின்ப நூலாகிய திருவாசகம் பாடிய

மாணிக்கவாசகரால் அருளிச்செய்யப் பெற்றதன்றென்றுங் கூறுவோருமுளர். அக்கூற்றின் அடியில் உண்மை இன்மையான், அஃது அறிஞருலகில் ஆக்கம் பெறுவதில்லை. திருக்கோவையார் அகப்பொருள் நூலாயிருத்தலான், அதைச் சிற்றின்ப நூலென்று அச்சார்பார் சொல்கிறார். அவரால் பேரின்ப நூலென்று கருதப்படும் திருவாசகமும் அகப்பொருள் நூலேயாகும். திருவாசகத்திலுள்ள அகப்பொருள் மின்சாரம் போன்றது. திருக்கோவையாரிலுள்ள அகப்பொருள் மின்சார விளக்குப் போன்றது. திருவாசகம் முன்னே அருளிச் செய்யப் பெற்றது. திருக்கோவையார் பின்னே அருளிச் செய்யப்பெற்றது.

சிற்றின்பம் - பேரின்பம் என்னும் ஆட்சி இடைக்காலத்தது. பண்டை நாளில் அவ்வாட்சி இல்லை. பெண்ணிழிவு தோன்றிய நாள் தொட்டு அவ்வாட்சியும் தோன்றலாயிற்று. முன்னை நாளில் இன்பம் இன்பமாகவே இருந்தது. பிரிவு பின்னே நுழைந்தது.

அழுக்காறு, அவா, வெகுளி முதலிய கட்டுகள் உயிர்கட்குண்டு. உயிர்கள் அக்கட்டுகளினின்றும் விடுதலையடைதல்வேண்டும். எப்படி? வழியென்னை?

கட்டுக்கறிகுறி தன்னலம். கட்டு உள்ளவரை தன்னலமிருக்கும்.

உயிர் தனித்து வாழ்ந்தால் விடுதலை பெறாது. அது தோன்றிய வண்ணமே கட்டுப்பட்டுக் கிடக்கும். உயிரின் இயற்கை தனித்து வாழ்வதன்று. அது சேர்ந்து வாழும் இயல்புடையது. இவ்வுண்மை, ஆராய்ச்சியால் உறுதி செய்யப்பட்டது. 'சேர்க்கையறம்' இயற்கையின் இயல்பு. உயிரின் கட்டவிழ்தலுக்கென்றே 'சேர்க்கையறம்' இயற்கையில் அமைந்துள்ளது.

ஒருவன் தன்னலமுடையவனாயிருக்கிறான்; ஒருத்தியும் அவ்வாறே தன்னலமுடையவளாயிருக்கிறாள். இருவரும் பிரிந்து தனித்தனியே உறைந்தால், அவர்தம் தன்னலக் கட்டு எங்ஙனம் அவிழும்?

ஒருவனும் ஒருத்தியும் சேர்ந்து வாழின் இருவரும் காதலால் விழுங்கப்படுகிறார். இருவரும் அன்பால் ஒருவராகிறார்; ஈருடலும் ஓருயிரும் ஆகிறாரென்க. "ஓராவிற்கு இருகோடு பூத்தாலென்ன" என்றார் நக்கீரனார். "சொற்பா லமுதிவள் யான்சுவை........நான் இவளாம் பகுதி...." என வரூஉந் திருக்கோவை மொழிகளை நோக்குக.

ஒருவனும் ஒருத்தியும் ஒன்றி வாழ வாழ இருவரிடையும் அன்பு பெருகுகிறது. அன்பு,

அவனுடையதை இவளுடையதாகவும், இவளுடையதை அவனுடையதாகவுஞ் செய்கிறது. பின்னே பிள்ளைப் பேறுண்டாகிறது. தாய்தந்தையர், தம் வாழ்வைப் பிள்ளைக்கென்றே அர்ப்பணம் செய்கிறார். ஈண்டுத் தன்னலம் அறுதல் கூர்ந்து கவனிக்கற்பாலது. பிள்ளைப் பேற்றால் எழும் அன்பு, மற்ற உயிர்களையும் தம்மைப்போல் கருத உந்தும்.

இந்நுட்பம் திருக்குறள் அதிகார வைப்புமுறையால் இனிது விளங்கும். அறன் வலியுறுத்தல், இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், பிள்ளைப் பேறு, விருந்தோம்பல் முதலிய அதிகாரங்களின் தொடர்பை உன்னுக.

தன்னலம் அறஅற மாசும் அகன்று அகன்று போகும். மாசு முற்றும் அகன்றவிடத்தில் அறக் கடவுள் கால்கொள்ளும். 'மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்' என்றார் திருவள்ளுவனார்.

அறம்வளர் நெஞ்சம் முற்றும் தன்னலமற்றதாதலின், அஃது எவ்வுயிரிடத்தும் அன்புசெலுத்தும் அருள்நிலை பெறுகிறது. அவ்வருள் நிலையை - அதாவது தன்னலமற்ற நிலையை-உயிர் தனித்து வாழ்ந்தால் அடையுங்கொல்? இதனால் ஒருவனும் ஒருத்தியுஞ் சேர்ந்து நடாத்தும் இன்ப அன்பு

வாழ்வு தன்னலக் கட்டை அறுப்பதற்கு உறு கருவியாய்த் துணை புரிதலையுணர்க.

உயிரின் கட்டையறுக்கத் துணை புரியும் அக இன்பமா சிற்றின்பம்? அந்தோ! என்னே காலத்தின் கோலம்! இன்பத்தை இரண்டாகக் கொள்வது தவறு. பழந்தமிழ் நூல்கள் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றையே அறிவுறுத்துகின்றன. பழந்தமிழர் வீட்டைத் தனிப்படுத்திக் கூறினாரில்லை. வீடு, வாக்கு மனங்கடந்து நிற்பது. அதை வாக்கால் எவ்வாறு சொல்வது? மனத்தால் எவ்வாறு நினைப்பது? சொற்கடந்த ஒன்றைச் சொல்லால் சொல்லாது விடுத்தனர் தமிழ்ப் பெரியோர். அறம்-பொருள்-இன்ப வாழ்வின் அடைவால் விளைவது வீடு. அடைவைச் சொல்லால் எங்ஙனஞ் சொல்லுதல் கூடும்?

அக இன்பம், மனமாசை அகற்றும்; இயற்கைக் கூறுபாடுகளில் அறிவைச் செலுத்தும்; அக்கூறுபாடுகளில் இறை கலந்திருப்பதைப் புலப்படுத்தும்; இவ்வாறு உயிர்க்கு விடுதலை நல்கும். இப்பெற்றி வாய்ந்த அக இன்ப அன்பு, திருக்கோவையாரில் ததும்பி வழிகிறது.

திருக்கோவையார் வாழ்வுக்குரிய இயற்கை நூல்; இன்ப அன்புக்குரிய அகநூல்; வீடுபேற்றிற்குரிய ஞான நூல். அஃதொரு தமிழ்க்கோயில்;

இன்ப அன்புத் தெய்வத்திருக்கோயில். அதனுள் இயற்கை-இறையின் கோலங்கள், பாட்டோவியங் களாக வரையப்பட்டிருக்கின்றன. இவ்வோவியங் களை அழியா முறையில் வரைந்தமைத்துத் திருக் கோவையாரென்னும் தமிழ்க்கோயிலை நமக்களித்த மாணிக்கவாசகனுர்க்கு நாம் எத்தகைக் கைம்மாறு செலுத்த வல்லேம்! உரிய கைம்மாறும் உலகில் உண்டோ? அத்திருக்கோயிலை முறைப்படி வழி பட்டு விடுதலை பெற முயல்வதே அவர்க்கு நாம் செலுத்துங் கைம்மாருகும்.

திருக்கோவைத் திருக்கோயிலை வழிபடுவோர் பலர். ஆனுல் ஒருசிலர் வழிபாடே இயற்கை-இறையினிடம் செல்வதாகிறது. வழிபாடுகள் பல திறத்தன. விரிவு ஈண்டைக்கு வேண்டுவதில்லை.

திரு. தை. ஆ. கனகசபாபதி முதலியார் திருக் கோவைத்திருக்கோயிலை ஒருவிதமுறைபற்றி வழி படலானுர். அவர் கற்பன கற்றவர்; கேட்பன கேட் டவர்; இல்லறமேற்றவர்; காவிய ஓவியப் புலமை பெற்றவர். அவர்தம் ஓவியத் திறன் 'மணி' ஓவிய வழிபாட்டுக்குப் பெருந்துணை செய்வதாகிறது. திருக்கோவையின் உள்ளங் காண்டற்கு ஓவியப் புலமையும் வேண்டற்பாலதே.

ஓவியர் கனகசபாபதியார் திருச்சிற்றம்பலக் கோவைக் கோயிலில் நுழைகிருர்; ஒவ்வொரு

தமிழ் ஓவியத்தையும் நோக்குகிறார்; காவியக் கருத்துடன் கருதுகிறார்; ஓவிய உணர்வால் உன்னுகிறார்; உன்ன உன்ன அவர்தம் நெஞ்சம் ஒவ்வோர் ஓவியக் கூறுகளில் ஒன்றி ஒன்றித் திளைக்கிறது. அவரே ஓவியமாகிறார். ஓவியமாய்த் தெளிவடைந்த பின்னர் அவர் தமக்கு நுட்பங்கள் விளங்கிய முறையில் திருக்கோவையாரியலைப் பசிய தீந்தமிழில் வடிக்கிறார். இவ்வாறு அவரால் வடிக்கப் பெற்ற நூலே இந்நூல்.

அகநூற்பொருளைச் சிலர் தொடர் கதையாக்கி விட்டனர். அப்பொருள் தொடர் கதையுடையதன்று. அதைத் தொடர் கதையாக் கொள்ளும் நெஞ்சம் சிறைப்பட்டு விடும். சிறைப்பட்ட நெஞ்சு உரிமை உணர்வு பொங்கி எழுதற்குரிய ஊற்றாகாது. அதன்கண் பாசி படர்ந்த அழுகற் சேறு சிதைந்து கிடக்கும். அகப்பொருள் நூல்கள் தொடர் கதைகளை உடையனவல்ல என்று இந்நூலாசிரியர் தோற்றுவாயில் குறிப்பிட்டுள்ளது மகிழ்ச்சியூட்டுகிறது.

தோற்றுவாயில் மற்றுமோரிடத்தில் ஆக்கியோர், "மாந்தர் அருளுடையராய் இருத்தல்வேண்டும் என்பதையும், உலகிலுள்ள பொருள்களில் இறைவனைக் காணும் பேறே அன்னார் இறைவன் இன்னருளைப் பெற்றமைக்கு அறிகுறியாம் என்

பதையும் சிறந்த முறையிற் கூறற்குச் சாலச் சிறந்தன அகப்பொருள் உறுப்புக்களே என ஞான வள்ளல் மணிவாசகனர் உணர்ந்து, அவற்றைத் திருக்கோவையாராகிய இந்நூலுள் பலப் பல முறையில் மக்கள் மனம் கொள்ளும் வண்ணம் கோவைக் கிளவிகள் அமைகின்ற முறையில் இடம் வாய்க்குந்தோறும் வெளிப்படுத்தலை நூற்களை ஆழ்ந்து படிக்கும் பயிற்சியுடையார் காணல் இயலும்'' என்று அகநூல் உள்ளந் தெரித்துள்ளார். இம்மொழிகள் அகநூற் கடலினின்றுந் திரண்டெழுந்த தெள்ளமிழ்தமெனக.

நூலாசிரியர் ஆங்காங்கே பொறித்துள்ள குறிப்புக்களில் தெய்வமணங் கமழ்கிறது. "தெய்வ மருவளர் மாலை" எனவும், " புணருந்தொறும் புணருந்தொறும் பெரும்போகம் பின்னும் புதிதாய்***'' எனவும், "* * *கயிலைப் பயில்புனமுந் தேம்பிணை வார்குழலாளெனத் தோன்றும்*** '' எனவும் வரூஉம் மணிமொழிகட்குத் திரு. கனக சபாபதியார் வரைந்துள்ள குறிப்புரைகளில் தெய்வமணங் கமழ்தல் காண்க. 'ஆசிரியரின் சொல்லாற்றல்','இறைவன் எழுதரிய உருவினன்' என்னுந் தலைப்புக்களின் கீழுள்ள குறிப்புக்களையும் நோக்குக.

திரு. கனகசபாபதி முதலியார் திருக்கோவை யாரைப் பற்றி நிகழ்த்தியுள்ள ஆராய்ச்சி, அந் நூல் இறைநூல் என்போர் கருத்துக்கு அரண் செய்து நிற்பது. திரு. முதலியார் கருத்து, மூலத் தின் உள்ளக் கிடக்கையைத் தெள்ளிதின் விளக் கும் மின் கதிராகும். இவ்வுண்மை, காய்தல் உவத்தலகற்றி நூலை ஆராய்வோர்க்கு இனிது விளங்கும்.

திரு. கனகசபாபதி முதலியார் இளைஞர்; மும் மொழிப் புலவர்; நாவலர்; பாவலர்; ஓவியர்; நடுநிலை நின்று எதையும் ஆராய்வோர். இவரனை யார் சேவை தமிழுலகுக்கு இதுபோழ்து வேண் டற்பாலது. திரு. கனகசபாபதி முதலியார்க்குத் தமிழுலகம் கடமைப்படுவதாக. இத்தகைய நூல் பல திரு. முதலியார் வாயிலாக வெளிவரு தல் வேண்டுமென எல்லாம் வல்ல இறைவனை வழுத்துகிறேன். தமிழ் வாழ்க! தமிழ் வெல்க!

திரு. வி. கலியாணசுந்தரன்

# திருக்கோவையார் இயல்பு

## தோற்றுவாய்

கோவை நூற்கள் யாவும் அகப்பொருள் இலக்கண உறுப்புக்களுக்கு இலக்கியமாய் இருப்பன ஆம். அவற்றுள் ஒவ்வொன்றன் தொடக்கத்திலும் குறிக்கப்படும் ஒப்பற்ற தலைவன் தலைவியரே நூல் முழுதும் தொடர்ந்து நிற்பவர் ஆகார். இவ்வுண்மையை நம் திருக்கோவையார் நன்கு உணர்த்தும்.

"பாங்கற்கூட்டம் நிகழாதாயின், இடந்தலைப்பாடு நிகழும்; இடந்தலைப்பாடு நிகழாதாயின், பாங்கற்கூட்டம் நிகழும்" என்பது கோவை இலக்கணம். ஆனால், பாங்கற்கூட்டமும் இடந்தலைப்பாடும் ஒன்றன்பின் ஒன்றாக இந்நூலுட் கூறப்பட்டிருக்கின்றன.

தலைவன் " இரவுக்குறி புணர்ந்து அலரெழுந்ததென்று விலக்கப்பட்ட பின்னர்த் தெருண்டு வரைதல் தலை; தெருளானாயின், அவ்வலரடங்கச் சில நாள் ஒரு வழித் தணந்துறைதல், உடன் கொண்டு போதல், தோழியால் வரைவு முடுக்கப்பட்டு அருங்கலம் விடுத்து வரைந்து கோடல்

இம்மூன்றினுள் ஒன்று முறைமை" என்பதும் கோவை இலக்கணம். ஆனால், ஈண்டு இம்மூன்று அதிகாரங்களும் வரிசையாய் அமைந்திருக்கின்றன.

சில அதிகாரங்கள் தொடர்பின்றிச் செல்லுதல் போலச் சில அதிகாரங்களுள் கிளவிகளும் தொடர்பின்றிச் செல்லுகின்றன. பகற்குறி என்னும் அதிகாரத்தில் தோழி தலைவனைக் களவொழுக்கத்தை விடுத்துத் தலைவியை மணந்து கொள்ளும்படி குறிப்பாய் உணர்த்தினாள். அதற்கவன் தலைவியை உயர்த்திக்கூறி உடன்படானாய் நிற்க, தோழி அவனை நோக்கி,

"வேய்தந்த வெண்முத்தஞ் சிந்துபைங்
  கார்வரை மீன்பரப்பிச்
சேய்தந்த வானகம் மானும்
  சிலம்பதன் சேவடிக்கே
ஆய்தந்த அன்புதந் தாட்கொண்ட
  அம்பல வன்மலையில்
தாய்தந்தை கானவ ரேனலெங்
  காவலித் தாழ்வரையே" (130)

எனத் தம் உண்மை கூறி வரைவு கடாவும் இச் செய்யுளில், அவள் தாம் (தலைவியுந் தானும்) குறப்

பெண்டிர் என்றும், தாம் வாழ்வது மலை நாடென்றும், தம் தாய்தந்தையர் குறவரே என்றும் கூறுகின்றாள்; பின்னர் வீட்டு நிலையும் உறவினர் நிலையுங் கூறி அவனை மணஞ் செய்துகொள்ளும்படி,

" படையார் கருங்கண்ணி வண்ணப்
   பயோதரப் பாரமும்நுண்
இடையார் மெலிவுங்கண் டண்டர்கள்
   ஈர்முல்லை வேலியெம்மூர்
விடையார் மருப்புத் திருத்திவிட்
   டார்வியன் தென்புலியூர்
உடையார் கடவி வருவது
   போலு முருவினதே " (136)

எனக் கூறும் இச்செய்யுளில், தம்மூர் முல்லை நிலம் என்றும், தம் ஐயன்மார் இடையர் என்றும், தலைவிக்குரிய தலைவனைத் தேடுதற் பொருட்டுக் காளை மாட்டின் கொம்பைத் திருத்திவிட்டனர் என்றும் கூறுகின்றாள். இங்ஙனம் முன்னரும் பின்னரும் கூறும் தோழி ஒருத்தியேயாயின், முன்னர்த் தம்மைக் குறவராகக் கூறிப் பின்னர் இடையராகக் கூறுதற்கு வழியில்லை. ஆதலின், இயற்கைப் புணர்ச்சியுட் காணப்பட்ட தலைவன் தலைவியரே நூல் முழுதும் தொடர்ந்து செல்கின்

றனர் என்று கொள்ளல் இயலாது. நூல் முழு தும் பொருளின் தொடர்ச்சி இல்லை எனினும், சில இடங்களிற் பல செய்யுட்கள் ஒரு பொருள் பற்றிச் செல்லுதலையும், பல இடங்களில் ஒவ்வொரு செய்யுளும் தனித்தனி நிற்கும் ஆற்றல் உடைமையையும் கூர்ந்து நோக்குவார் காணல் இயலும்.

மாந்தர் அருளுடையராய் இருத்தல்வேண்டும் என்பதையும், உலகிலுள்ள பொருள்களில் இறைவனைக் காணும் பேறே அன்னார் இறைவன் இன்னருளைப் பெற்றமைக்கு அறிகுறியாம் என்பதையும் சிறந்த முறையிற் கூறற்குச் சாலச் சிறந்தன அகப்பொருள் உறுப்புக்களே என ஞான வள்ளல் மணிவாசகனார் உணர்ந்து, அவற்றைத் திருக்கோவையாராகிய இந்நூலுள் பலப் பல முறையில் மக்கள் மனம் கொள்ளும் வண்ணம் கோவைக் கிளவிகள் அமைகின்ற முறையில் இடம் வாய்க்குந்தோறும் வெளிப்படுத்தலை நூற்களை ஆழ்ந்து படிக்கும் பயிற்சியுடையார் காணல் இயலும்.

இனி நாம், ஆசிரியர் பாத்திரங்களை நடிக்க வைத்து அகப்பொருட்கு அணி செய்யும் வகை பாடிய செய்யுட்களையும், தகுந்த இடங்களில் அவர் தம் கருத்தைச் செலுத்திப் பாடிய செய்யுட்களையும் காண்போம் :

## ஆசிரியரின் கடவுட் காட்சி

" திருவளர் தாமரை சீர்வளர்
காவிகள் ஈசர் தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்
காந்தள்கொண் டோங்குதெய்வ
மருவளர் மாலையொர் வல்லியின்
ஒல்கி யனநடைவாய்ந்
துருவளர் காமன்றன் வென்றிக்
கொடிபோன் றொளிர்கின்றதே." (1)

[தாமரை, காவி, குமிழ், கோங்கு, காந்தள் என்னும் ஐந்து வகை மலர்களினால் தொடுக்கப்பட்ட தெய்வ மணங் கமழும் ஒரு மாலையானது கொடி போல அசைந்து, அன்னம் போல நடந்து, மன்மதன் கொடியின் தோற்றம் பெற்று, ஒருவன்முன் விளங்குகிறது.]

காட்சியாகிய இக்கிளவியில் ஒருவன் ஒருத்தியைக் கண்டான் என்னும் செய்தியையே கூறல் வழக்கம். ஒருத்தியை ஒருவன் கண்டான் என்று சொல்லுவதற்குப் பதிலாக, கவிஞர் ஒருவன் ஒரு கொடியைக் கண்டான், ஒரு கொம்பைக் கண்டான் என்பர். கொம்போ கொடியோ ஆகுபெயராய்ப் பெண்ணை உணர்த்தும். ஈண்டு நம் மாணிக்கவாசகர் தம் கிளவித் தலைவற்கு ஒரு மாலையைத்

தோற்றுவிக்கின்றார். முகம், கண், மூக்கு, கொங்கை, கை இவற்றைக் குறிக்கும் தாமரை, காவி, குமிழ், கோங்கு, காந்தள் என்னும் (மருதம், நெய்தல், முல்லை, பாலை, குறிஞ்சிகளுக்குரிய) ஐவகைப் பூக்களைக் கொண்டது அம்மாலை என அவர் கூறியதிலும் வியப்பில்லை. ஆனால், பல வகை மலர்களால் தொடுக்கப்பட்ட அம்மாலை பல மணங் கமழ்ந்தது என்னாது, அது தெய்வ மணங் கமழ்ந்தது என அவர் கூறியது மிகவும் போற்றத் தக்கது. உலகிலுள்ள பொருள்கள் உரு வகையால் வேறு வேறாய் இருப்பினும், அவற்றில் இறைவன் ஒருவனே அமைந்திருக்கின்றான் என்பதைக் காட்டவே, உரு வகையால் வேறு வேறாயும் வேறு வேறு மணம் உடையனவாயும் இருக்கின்ற மலர்களின் கூட்டத்தினலாகிய மாலைக்கு ஆசிரியர் ஒரே மணத்தைக் கற்பித்தார். அவர் இக் கருத்துடையராய் எழுதினமையைத் 'தெய்வ' என்ற அடையால் அறியலாம்.

"உணர்ந்தார்க் குணர்வரி யோன்தில்லைச்
சிற்றம் பலத்தொருத்தன்
குணந்தான்வெளிப்பட்டகொவ்வைச்செவ்
வாயிக் கொடியிடைதோள்
புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும்
போகம்பின் னும்புதிதாய்
மணந்தாழ் புரிகுழ லாளல்குல்
போல வளர்கின்றதே." (9)

[ஒரு முறை உணர்ந்தவர்க்கு மீண்டும் உணர்தற்கு அரியவனும், தில்லையிலுள்ள திருச்சிற்றம்பலத்தில் இருக்கும் ஒப்பற்றவனுமாகிய இறைவன் குணமே உருவெடுத்து வந்தாற் போன்றிருக்கும் கொவ்வைக் கனி போன்ற சிவந்த வாயையும், கொடி போன்ற (துவளுகின்ற) இடையையும் உடைய இவள் தோளைக் கூடினால், கூடுந்தோறும் இன்பமானது மணம் பொருந்திய கூந்தலையுடைய இவள் அல்குலைப் போலப் புதிது புதிதாய் வளர்கின்றது.]

இச்செய்யுள் திருவள்ளுவரின்

" அறிதோ றறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு "

என்னும் செய்யுளுக்கு விளக்க உரை போன்று அமைந்திருக்கின்றது.

ஜீவன் இறைவனை உணர்ந்த ஞான்றே சித்த விருத்தி ஒடுங்கித் தன்னையும் மறந்து நிற்கின் றான். ஆதலால், 'உணர்ந்தார்க்கு உணர்வரி யோன்' என்றார்.

இறைவனின் அளப்பரிய குணத்தையே தலை வன் இடையீடின்றி நினைத்துக்கொண்டிருக்கிறான். ஆதலால், அவன் கண்முன் காணப்படும் பொரு ளும் அக்குணம் போன்றே தோன்றுகின்றது.

இச்செய்யுளில் தலைவியைத் தலைவன் இறை வனின் குணத்தின் உருவம் போன்று காண்கின் றமை நோக்கற் பாலது. தலைவன் தலைவியோடு கூடுந்தோறும் கூடுந்தோறும் புதிது புதிதாய் இன்பம் பெறுதல் போல, இறைவனின் குணத் தை நினைந்து நினைந்து உருக வல்லார் புதிய புதிய இன்பம் மீதூரப்பெறுவர் என்பதும், அவர் அங் ஙனம் இன்பத்தில் திளைத்து இறுதியில் சித்த விருத்தி ஒடுங்கிப் போக, இறைவனோடு ஐக்கி யத்தை அடைகின்றனர் என்பதும் இச்செய்யு ளின் திரண்ட பொருளாம்.

"காம்பிணை யால்களி மாமயி
லால்கதிர் மாமணியால்
வாம்பிணை யால்வல்லி யொல்குத
லால்மன்னும் அம்பலவன்
பாம்பிணை யாக்குழை கொண்டோன்
கயிலைப் பயில்புனமுந்
தேம்பிணை வார்குழ லாளெனத்
தோன்றுமென் சிந்தனைக்கே." (38)

[மூங்கில் இணையாலும், களிப்பையுடைய அழகிய மயிலாலும், ஒளியையுடைய பெரிய முத்தாலும், தாவுகின்ற மானாலும், கொடி நுடங்குதலாலும், அம்பலத்தை உடையவனும், பாம்பை இணைத்துக் குழையாகக்கொண்டவனுமாகிய இறைவனின் கயிலையிலுள்ள அவள் பழகும் இச்சோலையும் என் மனத்திற்குத் தேன் தொடையைக் கொண்ட நீண்ட கூந்தலையுடையாளென்றே தோன்றுகின்றது.]

இச்செய்யுளுள் தலைவியின் தோளுக்கு மூங்கிலும், சாயலுக்கு மயிலும், பல்லுக்கு முத்தும், கண்ணுக்கு மான்கண்ணும், உருவ நிலைக்குக் கொடியும் உவமையாதல் காண்க.

தலைவன், பொழில் கொண்டுள்ள நிலையால், அது தன் சிந்தனைக்குத் தன் தலைவியேயெனத் தோன்றுவதாகக் கூறுகின்றான்.

*இறைவன் அருட்குணத்தை நினைந்து நினைந்து உருகி அருளுடையராய் நிற்கும் பெரியார், இறைவற்கும் உலகிலுள்ள சராசரங்கட்கும் உள்ள வேற்றுமையை மறந்து சிற்சில சமயங்களில் அவற்றை இறைவனாகக் கருதுவர். இதனைப் பின் வரும் நம் தாயுமானார் செய்யுள் நன்கு உணர்த்தும் :*

"பண்ணேனு னக்கான பூசையொரு வடிவிலே
பாவித் திறைஞ்சவாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்கமனமும்
நண்ணேன லாமலிரு கைதான் குவிக்கவெனி
னாணுமென் னுளநிற்றிநீ
நான்கும்பி டும்போத ரைக்கும்பி டாதலா
னான்பூசை செய்யன்முறையோ
விண்ணேவி னாதியாம் பூதமே நாதமே
வேதமே வேதாந்தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
வித்தேய வித்தின்முளையே
கண்ணேக ருத்தேயெ னெண்ணே யெழுத்தே
கதிக்கான மோனவடிவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாக ரக்கடவுளே."

## ஆசிரியர் ஒரு நாடகக் கவிஞர்

### நாடகத்துள் ஒரு காட்சி

" கழிகின்ற வென்னையும் நின்றநின்
 கார்மயில் தன்னையும்யான்
கிழியொன்ற நாடி யெழுதிக்கைக்
 கொண்டென் பிறவிகெட்டின்
றழிகின்ற தாக்கிய தாளம்
 பலவன் கயிலையந்தேன்
பொழிகின்ற சாரல்நுஞ் சீறூர்த்
 தெருவிடைப் போதுவனே." (76)

[இறந்துகொண்டே வருகின்ற என்னையும், என் எதிர் நிற்கின்ற உன்னுடைய கார் காலத்து மயில் போலும் சாயலமைந்த தலைவியையும் நான் ஓர் இரட்டுத் துணியில் பொருந்த ஆராய்ந்து எழுதி, அதனைக் கைக்கொண்டு, இன்று என் பிறவியைக் கெட்டு அழிந்து கொண்டுவருவதாகச் செய்த பாதங்களையுடைய அம்பலவன் கயிலையிலே அழகிய தேன் பொழிகின்ற தாழ் வரையிலுள்ள உம்முடைய சிறிய ஊரின் தெருவிடை வருவேன்.]

" 'பெண் என்பாள் இரக்கமுடையாள்' என்பர் பெரியோர். மங்காய், நின்பால் அவ்விரக்கத்தை யான் காணப் பெற்றிலேன். அழிவை அடை

கின்றவனாய், இறக்கும் நாளை எதிர் நோக்குவே னாய் நிற்கின்றேன் யான். ஆனால், நீயோ, என் நிலை கண்டும் ஒரு வித மாறுபாடுமின்றிக் கல் போன்று நிற்கின்றாய். பிறர் துயரம் கண்டும் நிற்பார் மங்கையரோ ! பேதாய் ! நின் மானம் கெட யான் மடலேறப்போகின்றேன்,'' எனத் தலைவன் வஞ்சினம் கூறுகின்றான். அவன் மன வேறுபாட்டைக் காட்டுதற்கே, ஆசிரியர் 'நின்ற' என்னும் சொல்லைப் பெய்து 'நின்றநின் கார்மயில்' என உரைக்கலாயினர். மனம் வேறுபட்டார் நல் லோரெனினும், தாம் செய்தற்கியலாத காரியத்தை யும் தகாத காரியத்தையும் செய்யப் புகுவர் என்ப தைக் காட்டவே, அவர் அவன் வாயினின்றும் கிழி ஒன்ற நாடி எழுதிக் கைக்கொண்டு போது, வன்' என்னும் மொழிகளை வருவிக்கின்றார். இவை பேதை மொழியாதலை ஆசிரியர் தோழி யின் வாயிலாகக் கீழ் வரும் மூன்று செய்யுட் களில் வெளிப்படுத்துவார் :

'' நடன்நாம் வணங்குந்தொல் லோனெல்
நான்முகன் மாலறியாக் [லை
கடனும் உருவத் தரன்தில்லை
மல்லற்கண் ணார்ந்தபெண்ணை

உடனும் பெடையொடொண் சேவலும்
முட்டையும் கட்டழித்து
மடல்நாம் புனைதரின் யார்கண்ண
தோமன்ன இன்னருளே." (77)

[கூத்தனும், நாம் வணங்கும் பழையோனும், நான்முகனும் மாலும் முடியும் அடியுமாகிய எல்லேகளை அறியாத இயல்பாம் உருவதனையுடையவனுமாகிய அரனுடைய தில்லேயிலே வளப்பம் பொருந்திய கண் போன்ற பனையின் உதவியால் பெண் பறவையோடு ஒளி பொருந்திய சேவலேயும் முட்டையையும் பிரித்து மடலே நாம் செய்யின், மன்னனே, இன்னருள் யாரிடததாகும்?]

'மன்னனே, அது உனக்குத் தகுமோ?' எனக் கூறின், அவன் உறுதியைப் பின்னும் தூண்டும் என நினைத்து, தோழி உளப்பாட்டுத் தன்மைப் பன்மையில், "மன்னனே, நாம் நம் நன்மையைக் கருதி, வேருெரு குடும்பத்தினைக் கலேப்போமாளுல், நம்மிடத்தில் அருளுண்டு என்று நினைத்தற்கு இயலுமோ?" என மென்மொழியாற் கூறு இன்ருள் எனினும், அவள் சொற்கள், "மன்னனே, பறவைகளின் சுக வாழ்வைக் கெடுத்து 'மடல் அமைத்து உம்மூரிடை யான் வருவே'னென்று கூறுகின்ற உனக்குச் சிறிதேனும் அருளுண்டோ!

அருளிலா நீ என் தலைவிக்கு உரியவனாவையோ?"
என அவனை வினவுவனவாகவே நிற்கின்றன.

இச்செய்யுளால், அருளிலார் இறைவன் தாளிற்கு உரியவராகார் என்பதை ஆசிரியர் வெளியிடுகின்றார்.

" அடிச்சந்த மால்கண் டிலாதன
காட்டிவந் தாண்டுகொண்டென்
முடிச்சந்த மாமல ராக்குமுன்
னோன்புலி யூர்புரையுங்
கடிச்சந்த யாழ்கற்ற மென்மொழிக்
கன்னி யனநடைக்குப்
படிச்சந்த மாக்கும் படமுள
வோநும் பரிசகத்தே." (78)

[வேதங்களும் திருமாலும் கண்டறியாதனவாகிய அடிகளை எனக்குக் காட்டித் தானே வந்து என்னை ஆண்டு கொண்டு, அவ்வடிகளை என் முடிக்கு நிறமுடைய பெரிய மலராகச் செய்யும் பழையோனது புலியூரை யொப்பாகும் சிறந்த நிறத்தையுடைய யாழின் இசை போன்ற இசையையுடைய மொழியையுடைய கன்னியின் அன்ன நடைக்கு வடிவாலும் அதுவே என்று கருதப்படும் தகுதியாலும் சிறந்த படம் உம் சித்திரசாலையிலுண்டோ?].

'யாழ் கற்ற மென்மொழி' என்பதற்குத் தலைவியின் மென்மொழியிலிருந்து யாழ் இனியவோசையைக் கற்றுக்கொண்டது எனக் கூறினும் அமையும்.

"யாழும் எழுதி எழில்முத்
   தெழுதி இருளின்மென் பூச்
சூழும் எழுதியொர் தொண்டையுந்
   தீட்டியென் தொல்பிறவி
ஏழும் எழுதா வகைசிதைத்
   தோன்புலி யூரிளமாம்
போழும் எழுதிற்றொர் கொம்பர்உண்
   டேல்கொண்டு போதுகவே." (79)

[மொழியாக மொழியோடொக்கும் யாழை எழுதி, பல்லாகப் பல்லோடொக்கும் அழகிய முத்தை எழுதி, கூந்தலாகக் கூந்தலோடு ஒக்கும் இருள் போன்ற மெல்லிய பூக்களாலாகிய மாலையை எழுதி, உதடாக உதட்டோடொக்கும் கொவ்வைக் கனியை எழுதி, கண்ணாகக் கண்ணோடொக்கும், என்னுடைய பழைய பிறவி ஏழையும் கூற்றுவன் தன்னுடைய கணக்கில் எழுதா வகை சிதைத்தவனுடைய புலியூரிலுள்ள இளமாவடுவையும் எழுதி முடிக்கப்பெற்றதொரு கொம்பு உண்டாயின், அதனைக் கொண்டு ஈண்டு மடலேற வா.]

இவ்விரண்டு செய்யுட்களால் தோழி தலைவியின் உருவம் எழுத முடியாமையைக் காட்டுகின்றாள்.

தோழி கூறிய வகை ஒரு படம் எழுதப்படுமாயின், அஃது ஒரு பெண்ணின் உருவப்படமாகாமல் பல பொருள்களின் கூட்டுறவுப் படமேயாகும். அவன் அப்படங்கொண்டு மடலேறுவானாயின், பிறர் அறியும் குறிப்பு ஆண்டின்மையின், பயனற்றவனேயாவான். அன்றித் தன் கருத்திற்கியைந்த ஒரு படங்கொண்டு அவன் வருவானாயின், அப்படம் தலைவியின் படமெனத் தோழி முதலியோர் மதியாமற்போதலுங் கூடும். ஆக, இரண்டுபட்ட இந்நெறியில் தலைவனை நிறுத்தினாள் தோழி.

முன் 'காட்சி' என்னும் கிளவியில் தலைவியை ஆசிரியர் பல வகைப் பூக்களாலாகிய ஒரு மாலையாகக் கூறினார்; ஈண்டு அக்கருத்திற்கியையப் பொருள்களின் கூட்டங்களைத் தலைவியாகக் கூறுகின்றார்.

"வரிசேர் தடங்கண்ணி மம்மர்கைம்
மிக்கென்ன மாயங்கொலோ
எரிசேர் தளிரன்ன மேனியன்
ஈர்ந்தழை யன்புலியூர்ப்
புரிசேர் சடையோன் புதல்வன்கொல்
பூங்கணை வேள்கொலென்னத்
தெரியேம் உரையான் பிரியா
ஞெருவனித் தேம்புனமே." (83)

[வரிகள் பொருந்திய விசாலமான கண்ணையுடையவளே! மயக்கம் மிக்கு, நெருப்புச் சேர்ந்த தளிர் போன்ற மேனியையுடையவனும் குளிர்ச்சி பொருந்திய தழையைக் கையில் உடையவனும் ஒருவன் நமது தேன்மிக்க புனத்தைப் பிரியாதவனும் யாதொன்றும் உரையாதவனும் இருக்கின்றான். புலியூரின் முறுக்குக் கொண்ட சடையையுடைய சிவபெருமான் புதல்வனோ! மலர் அம்பினையுடைய மன்மதனோ அவன்! யாம் அறியேம். என்ன மாயமோ! ஒன்றும் எமக்கு விளங்கவில்லை!]

தான் கூறப்போகும் செய்தியைத் தலைவி செவி கொடுத்துக் கேட்கவேண்டும் என்னும் எண்ணத்தால் தோழி அவளை, 'வரி சேர் தடங் கண்ணி!' என்று முதலில் விளித்தனள்; தலைவியின் எண்ணத்தைச் சிறிது கலக்குவதற்காக, 'மம்

மர் கைம்மிக்கு' என்று பின்னர்க் கூறினள்; தான் கண்ட செய்தியால் நடக்கக் கூடியது பேரிடர்ப்பா டானதே என்பதைக் குறிப்பிட்டு அவளைத் தன் எண்ணத்தின் வழிக் கொண்டுவருவதற் காக, 'என்ன மாயங்கொலோ!' எனப் பின்னர்க் கூறினள்; அதன் பின்னர்த் தான் குறிப்பிடும் தலைவன்மாட்டு அவளுக்கு இரக்கம் உண்டா கும்படி, 'எரிசேர் தளிரன்ன மேனியன்' என்று கூறினள்; அவன் வருதலின் நோக்கம் அவளை மணம் செய்துகொள்ளுவதன் நிமித்தம் என் பதைக் குறிக்க, 'ஈர்ந்தழையன்' என்றனள்; தான் குறிப்பிடும் தலைவன்மீது தலைவிக்கு மதிப் புண்டாகும்படி, 'புரிசேர் சடையன் புதல்வன் கொல்! பூங்கணை வேள்கொல்!' எனப் பகர்ந்த னள். அவன் இதுவரை எவரையும் இரந்தறியான் என்பதை உணர்த்த, 'உரையான்' என்றனள்; அவன் தன் விருப்பத்தை அடைதலில் மிகவும் ஊக்கமுடையவன் என்பதைக் குறிக்க, 'பிரி யான்' என்று கூறினள்.

"நீகண் டனையெனின் வாழலை
 நேரிழை அம்பலத்தான்
சேய்கண் டனையன்சென் றாங்கோர்
 அலவன்றன் சீர்ப்பெடையின்

வாய்வண் டனையதொர் நாவற்
கனிநனி நல்கக்கண்டு
பேய்கண் டனையதொன் றாகிநின்
றானப் பெருந்தகையே." (84)

[நேர்மையான ஆபரணங்களையுடையவளே, திருச்சிற்றம்பலத்தான் மகனைக் கண்டாற் போன்ற தோற்றத்தையுடைய ஒருவன், ஓர் ஆண் நண்டானது தன் பெண் நண்டினுடைய வாயில் வண்டு போன்றதொரு நாவற் கனியை மிகவும் அன்போடு கொடுக்கக் கண்டு, பேயால் காணப்பட்ட பொருளின் நிலையை உடையவனாகி நின்றான். அந்நிலையைக் கண்டிருப்பாயானால், நீ இன்னும் உயிரோடு வாழமாட்டாய்.]

தன் கருத்திலேயே நின்ற தோழி தலைவியின் மனத்தை உருக்கும் வண்ணம், 'நீ கண்டனையெனின் வாழலை' எனக் கூறினள். அச்செய்தியால் அவள் நிலைக்குக் கேடு உண்டாகுமோ என்று எண்ணி, இடையூறொன்றும் இல்லை என்பதைக் குறிக்க, 'நேரிழை' என விளித்தனள்; பின்னர் நண்டுகள் இரண்டும் அன்பு கொண்டு ஒழுகும் ஒழுக்கத்தைக் கூறித் தலைவனின் மனநிலையை உணர்த்தினள்; அவன் அழிவுடையவனில்லை என்பதைக் குறிக்க,'நின்றான்' என்றனள்; அவன் தலைவனாதற்குத் தகுந்தவன் என்பதைக் குறிக்க, 'பெருந்தகை' என முடித்தனள்.

"மேவியந் தோலுடுக் குந்தில்லை
யான்பொடி மெய்யிற்கையில்
ஓவியம் தோன்றும் கிழிநின்
எழிலென் றுரையுளதால்
தூவியம் தோகையன் னையென்ன
பாவஞ்சொல் லாடல்செய்யான்
பாவியந் தோபனை மாமடல்
ஏறக்கொல் பாவித்ததே." (88)

[உடம்பிற் பூசியது, விரும்பி அழகிய தோலை உடுத்திக்கொள்ளும் சிவபிரானுருடைய திருநீறு; கையிலே உள்ளது உருவம் விளங்கும் படம்; அப்படத்திலிருக்கும் உருவம் உன்னுடைய உருவம் என்று பிறர் சொல்லுகின்ற உரையும் உளது. இறகினையுடைய தோகையையுடைய மயிலையொப்பாய், இதற்குக் காரணமாகிய தீவினை யாதென்று அறியேன்! அவன் யாதொன்றும் உரையாடான். இந்நிலையை அக்கொடியோன் நினைத்தது ஐயோ! பனையினது மடல் ஏறுவதற்குப் போலும்!]

முன், தோழி 78, 79-வது செய்யுட்களில் தலைவியின் உருவம் எழுத இயலா நிலைமைத்து எனத் தலைவனுக்குக் கூறியுள்ளாள். ஆதலின், அவள் ஈண்டுத் தலைவன் தலைவியின் படத்தொடு வந்திருக்கின்றான் எனக் கூறும் நிலையிலும் அவன் கைப்படம் தலைவியின் படமெனப் பிறர்

கூறுவது போலவும், தனக்கு அதில் நம்பிக்கை இல்லாதது போலவும் கூறுகின்ருள்.

தலைவி தலைவன்மீது அன்புடையவள் என்பதைத் தோழி நன்கு அறிவள். அவள் உடன்பாட்டை அவள் வாய்மூலம் அறிய அவாவுகின்ருள் தோழி. ஆனல், அவள் முயற்சி பயன்படவில்லை. அதனல், அவள் மனத்தைத் தாக்கும் சொல்லாலேனும் தன் எண்ணம் நிறைவேறும் என்று எண்ணி, அவள் தலைவனைப் 'பாவி' என அழைத்தனள். தன் எண்ணம் நிறைவேறும் பொருட்டுத் தோழி தலைவனைப் பாவி என அழைத்தனளேனும், தலைவிக்குத் தன்மீது பெருவெறுப்பு உண்டாகா வண்ணம் முதலில் மெய்ம் முழுதும் திருநீறுடையனுய்க் கையிற் படமுடையவனுய்ச் சொல்லாடானுய் அவன் நிற்கும் நிலையைக் கூறி, கடைசியில் அவன் மடலேறப்போவதை அறிவித்து, இடையில் அவள் அவனைப் பாவி என அழைத்தமை மிகவும் போற்றும் தகைத்தே.

## இறைவன் எழுதரிய உருவினன்

“ஈசற்கு யான்வைத்த அன்பி
னகன்றவன் வாங்கியவென்
பாசத்தின் காரென் றவன்தில்லை
யின்ஒளி போன்றவன்தோள்
பூசத் திருநீ றெனவெளுத்
தாங்கவன் பூங்கழல்யாம்
பேசத் திருவார்த்தை யின்பெரு
நீளம் பெருங்கண்களே.” (109)

[ஈசனிடத்து யான் வைத்த அன்பு போல அகன்று, அவன் வாங்கிய என் பாசம் போலக் கறுத்து, அவனது தில்லையின் ஒளியை ஒத்து, அவன் தோள்களில் பூசிக்கொள்ளும் அத்திருநீறு போல வெளுத்து, அவனுடைய பூப்போலும் திருவடிகளை யாம் பேசும் அந்தத் திருவார்த்தை போல நீண்டனவாய் இருக்கும் எனனுற் காணப்பட்டவளுடைய பெரிய கண்கள்.]

‘நீ கண்டவள் எவ்வாறிருப்பாள்?’ எனக் கேட்ட தோழிக்குத் தலைவன் பொதுப்பட அவள் உறுப்புக்களைக் கூறிய பிறகு, சிறப்பாகக் கண்ணின் இயல்பைக் கூறுகின்றான். தலைவியின் கண்ணை அளந்து கூறுவான் போலக் கூறுகின்றான் எனினும், அவன் கூறும் உவமைகளால்

அக்கண்ணின் அளப்பரிய நிலைதான் வெளியாகின்றது.

முன்பு தோழி தலைவியின் உருவம் எழுதரிய இயலையுடையது என்று கூறினாள். ஈண்டுத் தலைவனும் அவள் மொழிகளுக்கு நற்சாட்சிப் பத்திரம் கொடுப்பான் போன்று தலைவியின் உருவம் கூற இயலாததொரு இயல்பையுடையதென்று கூறாமற் கூறுகின்றான். முன்பு தோழியின் வாயிலாகத் தலைவியின் உருவம் எழுதற்குரியதாகாமையை உணர்த்திய அடிகள் ஈண்டு அதனையே தலைவன் வாயிலாகச் சொல்லாமற் சொல்ல வைக்கின்றார். இறைவனின் அருட்குணம் உருவெடுத்து வந்தாற் போன்றதொரு தலைவியின் உருவமே எழுத முடியாததொன்றாகுமானால், அவ்விறைவனின் உருவம் எழுதக் கூடியதொன்றாகுமோ? ஆதலின், இறைவன் எழுதரிய உருவினன் என்பதை அடிகள் காட்டுகின்றார்.

## இறைவனைப் பற்றும் வழி

" பற்றொன் றிலார்பற்றுந் தில்லைப்
பரன்பரங் குன்றில்நின் ற
புற்றொன் றரவன் புதல்வ
னெனநீ புகுந்துநின் றால்
மற்றுன்று மாமல ரிட்டுன்னை
வாழ்த்திவந் தித்தலன் றி
மற்றொன்று சிந்திப்ப ரேல்வல்ல
ளோமங்கை வாழ்வகையே." (178)

[பற்றிலாதவர்கள் பற்றும் தில்லைவாழ் பரனது திருப்பரங்குன்றில் வாழும், புற்றிடத்தே பொருந்தும் பாம்புகளை ஆபரணமாகவுடைய சிவனின் புதல்வனாகிய முருகக் கடவுளென நீ எம் வீட்டெல்லையிற் புகுந்து நின்றால், அங்குள்ளவர்கள் வளப்பம் பொருந்திய நெருங்கிய சிறந்த மலரிட்டு உன்னை வாழ்த்தி வணங்காமல் வேறொன்று நினைப்பார்களானால் என் தலைவி வாழ்வகை வல்லளோ?]

'தலைவ, நின்னை என் தலைவியின் பொருட்டு வருபவன் என என்னூரார் கொள்வாராயின்' என வெளிப்படையாகக் கூறுவதற்குப் பதிலாகத் தோழி, 'மற்றொன்று சிந்திப்பரேல்' என மிகத் திறம்படக் குறிப்பாகக் கூறுகின்றாள்.

'பற்றொன்றிலார் பற்றும் தில்லைப்பரன்' என்றதால், உலகப் பற்றுடையார் பற்றற்கு அரியன் இறைவன் என்பது பெறப்படும்.

'பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு'

என்பதும்,

'பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்'

என்பதும் தமிழ்மறையாதலின், இத்தொடர்க்குப் 'பற்றற்றான் தாளினைப் பற்றி, அதனால் பிறப்பறுக்கப் பெற்று, நிலையற்ற பொருள்களின் மீது பற்றுத் தானே நீங்கப் பெற்றுப் பற்றற்றாராய் வாழும் பெரியார் பற்றும் தில்லைப்பரன்' எனப் பொருள் கொள்க.

188-ஆம் செய்யுளில், 'பற்றற்றவர்க்குப் புகலோன்' என வரும் தொடர்க்கும் இப்பொருளே கொள்க.

## உண்மையடியார் தோற்றம்

" அலரா யிரந்தந்து வந்தித்து
மால்ஆ யிரங்கரத்தால்
அலரார் கழல்வழி பாடுசெய்
தாற்கள வில்லொளிகள்
அலரா விருக்கும் படைகொடுத்
தோன்தில்லை யானருள்போன்
றலராய் விளைகின்ற தம்பல்கைம்
மிக்கைய மெய்யருளே." (180)

[தாமரை மலர் ஆயிரம் கொண்டு சென்று, அவை களை இட்டு வணங்கி, ஆயிரம் கரத்தால் மலர் போலும் பாதங்களை வழிபடுதலைச் செய்தவனுகிய திருமாலுக்கு அளவில்லாத ஒளிகளைப் பரப்புகின்ற சக்கராயுதத்தைக் கொடுத்த சிவபிரானின் அருள்போல, ஐய, உன்னுடைய மெய்யருள் சிலரறியும் பழியாய்ச் சின்னாள் இருந்து, இன்று பலரறியும் பழியாய் முடிந்தது.]

'இறைவனின் மெய்யருள் பெற்ற அன்பர் உலகினர்க்குப் பித்தர் பேயர் போன்று காணுமாறுபோலத் தலைவ, உன் மெய்யருள் பெற்ற தலைவி இன்று எம் ஊரினரால் பழிக்கப்படும் நிலையில் இருக்கின்ருள்' என்பதும், 'அவ்விறைவன் தானே வந்து உலகினர்க்கு அவ்வடியார்

தன்னருள் பெற்றமையைக் காட்டுங் காலத்து அவ்வன்பரை உலகினர் மதித்தேத்துமாறு போலத் தலைவ, நீ என் தலைவியை மணந்து, அவளை எல்லோரும் புகழுமாறு செய்தல் வேண்டும்' என்பதும் தோழியின் கருத்து.

உண்மை அடியார் பித்தர் பேயர் போன்று உலகினர்க்குக் காணப்படுவர் என மணிவாசகனார் இச்செய்யுளால் மெய்யடியார் தோற்றம் கூறுமாறு அறிக. இவர் இக்கருத்துடையராதலைத் திருவாசகத்து,

'உத்தம னத்த னுடையா
 னடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு மாலிவ
 னென்ன மனநினைவி
லொத்தன வொத்தன சொல்லிட
 வூரூர் திரிந்தெவருந்
தத்தம னத்தன பேசவெஞ்
 ஞான்றுகொல் சாவதுவே'

என வருஞ் செய்யுளால் நன்கு உணரலாம்.

## ஆடவர்க்கு அறன் வலியுறுத்தல்

“ பறந்திருந் தும்பர் பதைப்பப்
படரும் புரங்கரப்பச்
சிறந்தெரி யாடிதென் தில்லையன்
னாள்திறத் துச்சிலம்பா
அறந்திருந் துன்னரு ளும்பிறி
தாயின் அருமறையின்
திறந்திரிந் தார்கலி யும்முற்றும்
வற்றுமிச் சேணிலத்தே.” (213)

[மலைநாடனே, பறந்துசென்று பொருந்தித் தேவர்கள் பதைக்கும் வண்ணம், பறந்து செல்லும் முப்புரங்கள் மறையும்படி, விளங்கி நெருப்பினால் விளையாடும் சிவபெருமானின் தென்தில்லையையொப்பாளிடத்து, அறம் திருந்துதற்குக் காரணமாகிய உன்னருளும் வேறுபடுமாயின், அருமையான வேதங்களின் முறைமை பிறழ, இவ்வகன்ற நிலத்துக் கடல் முழுதும் வற்றும்.]

தலைவனிடத்துத் தலைவியைச் சேர்க்கும் தோழி, அவன் அவள்மாட்டுக் கொண்ட அருள் ஒரு சிறிதும் மாறக்கூடாது என்னும் எண்ணத்தால் அவனை வேண்டிக்கொள்ளுவாள் போன்று கட்டளை இடுகின்றாள். அவள், அறம் திருந்துதற்குக் காரணமாகிய அருளுடையான் தலைவ

னென முதலில் அவனைப் புகழ்ந்து கூறி, பின்னர் அவ்வருள் தலைவியிடத்து மாறுபடுமாயின் கடல் முழுதும் வற்றும் எனத் தலைவியின் அளப்பரிய உயர்வினைக் கூறினாள்.

'கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை'

என்பதும்,

'விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது'

என்பதும்,

'விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி'

என்பதும், தமிழ் மறையாதலான், கடல் வற்றுமாயின் மழை இன்றிப் போகும். மழை இலதாயின், புற்பூண்டுகள் விளையா. புற்பூண்டுகள் இல்லையாயின் பசி உயிர்களை வருத்த, உலகம் அழியும்.

இதனை மனத்திற் கொண்டே, "தலைவ, தலைவியின்பால் நீ அருள் கொள்ளாயாயின், நீ அழிவதோடு உலகத்தையும் அழிப்பவனாவை" என்னும் கருத்துப்பட, 'கடல் நீர் வற்றும்' எனக் கூறினாள் தோழி.

